உ

கடவுள் துணை.

தாரண வருஷத்திய வெள்ளம்

# திருநெல்வேலி

கொட்டாய் பத்திய சிந்தும்
அடங்கியிருக்கின்றது.

இஃது,
சிறுமணவூர்,
முனிசாமி முதலியார்
அவர்களால்
இயற்றப்பட்டு,

தமது
சென்னை சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1906.

௨

கடவுள் துணை.

# தாரணவருஷத்திய
# வெள்ளச் சிந்து.

**இராகம்-நாதநாமக்கிரியை-பல்லவி.**

விந்தையைக்கேளீர் தாரணவருடத்தின்
வேடிக்கைப்பாரீர்

**அநுபல்லவி.**

சந்ததமுலகினோர் சாற்றுந்தாரணவருடம்
சார்ந்தஅற்பசிகடை நேர்ந்தபதினேந்தில் விந்

**சரணங்கள்.**

காற்றுயிடிமின்னல் கடுகளவில்லாமல்
பார்த்தபிடத்தில்வானம் பகரவொண்ணாமேகம்
சேர்த்துக்கலந்திரண்டு சனியுடன்சனியெட்டு
ராத்திரிபகலாக க்ஷாத்திர்யமாய்ப்பெய்த
வருஷத்தினாலே பிரஜைகள்வசிக்கும்
வளவின்முன்னாலே—வெள்ளம்
வந்ததேயெனக்கூவி வாய்விட்டலறித்தாவி
மைந்தர்மக்களைமேவி மனையேயடிபாவி
இந்தயிடத்திலினி யிருந்தாற்பிழையோமினி
எந்தயிடஞ்செல்வோ மென்றுயிறைச்சலிட்ட விந்
திண்டிவனத்தைச்சார்ந்த திடமானபாலாறு
பண்ரொட்டியருகினில் பகரும்பெண்ணையாறு
அண்டைநெல்லிகுப்பம் அடுத்தகெடிலத்தாறு
கண்டாலேபிர்மிக்கும் கடலோரம்உப்பாறு
இதுவெல்லாம்பிரண்டு எத்தனையோகிராமம்
ஏரிகளுடைந்து—இன்னம்
வெள்ளாராகவாறு வினவும்திருவையாறு
கொள்ளடங்காவேரி கொசுருக்குமடுவுகள்
வெள்ளம்பெருகியேகி வெகுவீடுதரையாகி
பள்ளங்கள்மேடாகி பயிர்கள்கடலிற்சேர்ந்த விந்
கூடலூருமஞ்சா குப்பந்திருப்பாப்பூர்
தேடரியகொட மங்கலம்வாவூரார்
ஓடங்களிலேறி யோடிப்பிழைத்தார்சிலர்
வீடிடிந்தவர்படும் விசனமதைக்கண்டால்
ஐயையோசுவாமி இதுவென்ன
அனியாயம்பூமி

எல்லாந்திரண்டலே கடலில்சேர்க்குதேயென்ன
பொல்லாதகாலமோ பூமிபாரமோஐயோ
கல்லானவீடெல்லாங் கணத்திலிடியுதென்று
சொல்லாமலேஆல மரத்திலேறியிருந்த விங்
தினந்தோறுந்தேடின திரவியத்தாசையால்
மனதுநொந்துசிலர் மனைவிமக்களைவிட்டு
விசனத்துடனேதன் வீட்டுக்கருகிலுள்ள
கனத்தமரத்திலேறி கண்ணீர்விட்டிருக்கையில்
பிரளயம்பெருத்து பேழைகள்முதலான
பொருள்களையடித்து—நல்ல
பாத்திரத்துடன்சில பலகைதவலைசொம்பு
ஆற்றிலடித்துப்போக வதைக்கண்டுமனம்நொந்து
னேற்றேதெரிந்தாலும் நிலைக்கச்செய்வோமென்று
தோத்திரஞ்செய்தாரும் தொழுதோருமழுதோரும் விங்
வர்த்தகர்முதலானோர் வாழுங்குடிகளுக்கு
தெற்கித்திடிரானோருந் தெய்வமென்றுரைக்கலாம்
கற்கும்பிள்ளைகூட கடுந்துலைபோய்வரும்
மார்க்கட்செய்கைபோல மழைசெய்ததுரோகத்தால்
கம்பிகளுடைந்து க்ஷணத்தில்சேதியைச்சொல்லுந்
தந்திகளறுந்து—அளவற்ற
கூண்டுவண்டிகள்செல்லும் கும்பினிரோட்டுயி
ராண்டுசெல்லுமினி யெப்போதும்போலாக
நீண்டதென்மார்க்கத்தில் நிறைந்தபிரளயத்தால்
ஆண்டவனேயென்ன அனியாயமென்றழும் விங்

## வேறுமெட்டு கும்மி.

கும்மியடிபெண்கள் கும்மியடி நன்றாய்
குனிந்துநிமிர்ந்து கும்மியடி
செம்மையாகவே தாரணவருடச்
சேதியைப்பாடி யடியுங்கடி. 1

திண்டிவனமுதற் பண்ணுரொட்டி யதைச்
சேர்ந்தவிழுப்புரம் நெல்லிகுப்பம்
வண்டிசெல்லவழி யில்லாமலேவெள்ளம்
வளைத்துக்கொண்டதைப் பாருங்கடி. 2

மஞ்சாகுப்பம்புதுப் பாளயங்கூடலூர்
மத்தியிலுண்டொரு பட்டிக்காடு
கொஞ்சனஞ்சமல்ல ஐம்பதுவீடுகள்
குறிப்புதோற்றுதோ பாருங்கடி. 3

பெண்ணையாறுகண்டால் மதிமயங்குமதை
பார்க்கவும்நேத்திரந் தான்கூசும்

கண்களிருபது பாளமிருந்திடங்
காணுமல்தேடுறூர் பாருங்கடி. 4
நாரத்தைத்தேட முடியாமல் பிள்ளை
தந்தையைத்தேடக் கிடையாமல்
நேரத்திலேவெள்ளம் வந்திடவே சிலர்
நீஞ்சத்தெரிந்தவர் தான்பிழைத்தார். 5
பெட்டியெடுத்துத் தலையில்வைத்து தன்
பிள்ளையைக்கூட்டி நடக்கையிலே
கிட்டகிட்டவெள்ளம் வந்ததெனச்சொல்ல
விட்டுவிட்டோடுறூர் பாருங்கடி. 6
யுகமுமுடிவாச்சு தென்பாரும் ஐயோ
ஓடிப்பயனில்லை யென்பாரும்
ஜெகமுழுதுந் தரையாச்சுதெனச்
சித்தங்கலங்கினூர் பாருங்கடி. 7
நெல்லுவரகுடன் கம்புசோளம் நெடு
நாளாய்விளைகிற பூமியெல்லாம்
சொல்லத்தகாத மணல்மேடிட்டதை
சொகுசாய்நீங்களும் பாருங்கடி. 8
மணலையெடுக்க முடியாமல் மறு
விதைவிதைக்கவு மில்லாமல்
கிணற்றில்விழுந்த கிரிமியைப்போலவர்
கிலேசப்படுவதைப் பாருங்கடி. 9
தங்கயிடஞ்சற்று மில்லாமல்கண்ணில்
தண்ணீர்விட்டுபல யெண்ணமுடன்
யெங்குந்திரிகிற கூட்டங்களுக்கவர்
யென்னதானஞ்செய்தார் கேளுங்கடி. 10
இடையிலுடுத்திய வேட்டிகளுஞ் சில
யேழைக்குத்தகுந்த சேலைகளும்
தடையிலாமலே ஒவ்வொருஊரிலும்
தானங்கொடுக்கிறூர் பாருங்கடி. 11
இருபத்தினுன்கு வருடமாக வருணன்
யெண்ணியிருந்த சினத்தையெல்லாம்
குறைவில்லாமல் முடித்தானென்றுசொல்லி
கூட்டமாய்க்கும்மி யடியுங்கடி. 12
ஆதியிலவ்வைத் தமிழ்வாழி புவி
யாளும்விக்டோரி சுகம்வாழி
ஓதினவன்முனி சாமிவாழியென்று
உரைத்தார்நாவலர் கேளுங்கடி. 13

தாரணவ்ருடத்திய வெள்ளம் முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# திருநெல்வேலி கொட்டாய் சிந்து.

———*———

விநாயகர் துதி-வெண்பா.

சத்ருருவால் தீயடுத்த சாதுசங்க நடனசபை
பத்தியெரிந் தேமாளப் பார்த்தவதை—இத்தரையில்
எல்லாருங் கேட்க விளம்புதற்கு முன்கடவுள்
உல்லாசக் கரிமுகவனோர் துணையே.

இதுவுமது வெண்பா.

பொன்னுலகர் வாழ்த்தும் புனிதனரிச் சந்திரன்றன்
நன்கதையின் சீரறியா நாய்களையும்—அன்னிதமாய்
தீயிட்ட வஞ்சரையும் தீநரகி லேவீழ்த்த
ஐயனின் செயல்தா னறி.

இராகம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்-பல்லவி.

கொடுமையைக்கேளீர் கூத்துபார்க்கப்போன
கொடுமையைக்கேளீர்

அநுபல்லவி.

படியினிலாயிரத் தொண்ணூற்றுருமாண்டில்
பகருஞ்ஜூலைமாதம் இருபத்தாருந்தேதி கொ

சரணங்கள்.

திருநெல்வேலிநகர் தேரடித்தெருவினில்
தெற்குவடக்குப்பாதை திகழானமேல்வாடை
அரியபரமசிவன் ஆலயபின்புறம்
ஐம்பதுகெஜமுள்ள அகலமைதானத்தில்
கம்பிகள்நாட்டி-அந்த சவுக்குகம்பிகள்மேலே
பனையோலைமாட்டி—வரும்
ஜெனத்தொகைஒருலட்சம் சேரயிடமுண்டாக்கி
மனதுக்கிசைந்தபடி மலைபோலிறுக்கிக்கட்டி
பனைப்பந்தலென்றதை பகரயிடமில்லாமல்
பார்த்திட்டவுள்புற தீர்த்திட்டலங்காரக் கொ
சலவைப்புடவைகட்டி ஜாலர்குச்சுகளோட்டி
சதுர்மேடைசுற்றிலும் எதிர்புறமுழுதிலும்
லஸ்தர்குளோப்புகட்டி லாந்தர்சிமினிமாட்டி
ரசகுண்டுசரமந்த திசையெட்டும்கிலியாக்கி

படுநாக்கள்மீட்டி ஐதீகமுறைப்படி
வேஷத்தைக்காட்டி—நல்ல

கட்டியக்காரனும் களறிமுழங்கப்பேச
கணகணகணவென்று தாளமத்தளம்வீச
அட்டியில்லாமலே ஆட்டம்நடத்தும்போது
அமைத்தபிர்மனுமப்போசமைத்தார்போலிருக்கையில் கொ

ஐந்துபிரிவுசென்று ஆறும்பிரிவின்போது
திங்கட்கிழமையன்று தேதியிருபத்தாறில்
பட்சிபறவைதூங்கும் பனிரெண்டுமணிராத்ரி
சிந்தைகளையுமான சரித்ரம்நடக்கும்போது

யாரொன்றுசொல்வேன் நெருப்பிட்டபடவாக்கள்
யெவரொன்றுசொல்வேன்

ஐயையோசிவசிவா அர்த்தராத்திரிவேளை
ஆட்டம்பார்த்தஜென கோஷ்டமுறைப்பதற்கு
அரியுஞ்சிவனுமல்ல ஆதிசேடனுமல்ல
வெளியிலோடுவதற்கு வெறிகொண்டுமெரியுண்ட கொ

ஒருவர்மேலொருவர்கள் விழுந்துபுரண்டெழுந்து
ஒட்டம்பிடித்துவெளி கேட்டில்வருகும்போது
திருட்டுப்பசகளாரோ திருவுகோல்மாட்டடி
தெரியாமல்வழியென்று பிரியாமல்ஜெனமெல்லாம்

பேய்போலேயிரைந்தார்-சிலர் வாயிலறைந்துக்கொண்டு
பிணம்போலேவிழுந்தார்

கதவைத்திறங்களென்று காக்கைபோலிறைவாரும்
கையைமுறித்துக்கொண்டு கடவுளைத்தொழுவாரும்
விசனக்கடலில்மூழ்கி வெறியர்போலலைவாரும்
விட்டோமுயிரையென்று கட்டைபோல்விழுவாரும் கொ

பின்னுமீஸ்வரன்கோயில் பெரியமதிலேறி
பிழைப்போமென்றேசுவர் பிடித்தயெகுரும்போது
தன்னாற்சகிக்கவொண்ணு தணலும்புகையினாலே
தடுத்துவிழுந்துகைகால் ஒடிந்துக்கிடந்தார்சிலர்

தாண்டியேகுதித்தார்-சிலர் தடமாடிகளைமீறி
தரையோடேமடிந்தார்—அங்கே

மாட்டியிருந்தலஸ்தர் லாந்தர்சிமினியெல்லாம்
மடமடமடவென்று படபடபடவென்று
ஈட்டியடித்தாற்போலே யெரிந்தஅம்புகள்போலே
யிளைத்தமனிதர்மேலே துளைத்திடவொருக்காலே கொ

புகைதாங்கிவயர்வீங்கி போனபிணங்கள்பாதி
பொறிபட்டுகுரிகெட்டு மெரிபட்டபிணம்பாதி
வகைகெட்டுவழிவிட்டு தலைசுட்டபிணம்பாதி
வாரைக்கம்பிகள்வீழ்ந்து சாய்ந்தபிணம்பாதி
வெரும்பிணம்பாதி தோல்களுரிந்துப்போன
வெண்பிணம்பாதி—பனி

ஓலையெரிந்துவீழ்ந்து வுடல்தீஞ்சபிணம்பாதி
ஒருவர்க்கொருவர்கட்டி உருண்டபிணங்கள்பாதி
தாளைத்திறந்துக்கொண்டு தனித்தபிணங்கள்பாதி
தையலர்பிணம்பாதி கைவெந்தபிணம்பாதி கொ

ஆறுபெருகிவெள்ளம் அகமெல்லாம்புரண்டாற்போ
லந்தத்திருநெல்வேலி அடக்கலமொருக்காலே
தாறுமாறாய்கூவி தாயற்றசேய்போலே
தாயார்பிள்ளையைத்தேடி தமயன்தம்பியைத்தேடி
பெருங்கூச்சலோடே குய்யோமுறையோவென்று
பேய்களைப்போலே

அங்குமிங்குமாயோடி ஐயையோவெனக்கூவி
ஆரோவோர்படுபாவி - ஆட்டம்போட்டகொள்ளை
எங்கள்வயறெரிய யெங்கிருந்தானென்று
எட்டுத்திசையுங்கூச்சல் கொ டிவருஷம்போலே கொ

கடவுளைப்போன்ற கலைக்டர்வரதராவு
களரிவிதியறிந்து கடுகப்புரவியேறி
திடமற்றநகருக்கு தேறுதல்மிகச்சொல்லி
தீயுமடங்கஜெல முய்யும்படிச்செய்து
ஆள்களைச்சேர்த்து பிணநாற்றம்வீசிய
அனற்களம்பார்த்து—சொல்லும்

அலகைபோலேமாய்ந்த அனியாயப்பிணங்களை
அடுக்கடுகத்தெருவெல்லாம் படுத்தார்போல்வளத்திட
நிலையுந்தடையுஞ்செய்ய வுலகிலொருவரில்லை
நீட்டுஞ்சவங்கள்மேலே நாட்டார்விழுந்தழுத கொ

## கு ம் மி.

பத்தியெரிந்திட்ட கொட்டாய்பந்தலை பாடிக்கும்மி யடிப்ப தற்கு, சித்திவிநாயகன் பொன்னடிசென்னியிற் சேர்த்துக்கும்மி யடியுங்கடி. 1

கொஞ்சிக்குலாவியே கூத்துபார்க்கப்போயி கூட்டமாய்மாண்ட கொடுமைதன்னை, வஞ்சியரெல்லாருங் கூடிக்கொண்டேயதன் வகையைச்சொல்லி யடியுங்கடி. 2

கள்ளுக்குடியனைச் சாராயவெறியனைக் கட்டைகளைச்சில மொட்டைகளை, உள்ளேவிடுகிற தில்லையென்று-அவ ருறத்திச் சொன்னார் யிந்துக்களே. 3

விடுகிறதில்லை யெனவுரைத்தவந்த வேடிக்கைகெடுக்க வேணுமென்று, தடியர்மடையர்கள் சேர்ந்துக்கொண்டு-முதல் தடங்கல்செய்தாரா மிந்துக்களே. 4

கல்லுகள்விட்டு யெறிந்தாராம்-சிலர் கதவைச்சாற்றி யடைத்தாராம். மல்லுசெய்யசிலர் கார்த்துக்கொண்டேதீயை மாட்டிவிட்டார்களா மிந்துக்களே. 5

ஓலையெல்லாம்பனை யோலைகளாமதற் கேர்த்தாசையான சவுக்குமரம், காலாக்கினிபோலே யெரியும்போது-கூச்சல் காதினால் கேட்கவே கூடலையாம். 6

ஆண்டவன்போலே கலெக்டர்வரதாரவ் அட்சணந்தன்னிலே யோடிவந்து, நீண்டமலைபோ லெரிகிறதீயிலே நீர்மழைபெய்தாரா மிந்துக்களே. 7

தன்னிணைவிட்டு அவிக்குமுன்னேயது தானுயெரிந்து குமிங்கிடவே, அண்ணல்செயலென வெண்ணமிட்டுசில ஆட்களைவிட்டுக் கிளறினராம். 8

உருவுதெரியாப் பிணங்களெல்லாமொரு வாடைமுழுதும் வளத்தினராம், குரிகள்தெரிந்த பிணத்தையெல்லாந்-தெரு கோடிமுழுதும் வளர்த்தினராம். 9

ஊராரடக்கலம் கூச்சலிட்டு-அங்கே ஓடியேவந்து யிணைச்சலிட்டு, தாறுமாறுகவே வெந்தபிணத்துமேல் தாங்களும்வீழ்ந்து புலம்பினராம். 10

என்பிள்ளையென்று அழுவாரும்சிலர் தன்பிள்ளையென்று விழுவாரும், தன்பிள்ளையென்றும் பிறர்களென்றும்பெற்ற தாய்களேபார்க்கத் தெரியலையாம். 11

புருஷரிறந்திட்ட பெண்டுகளும்சிலர் பெண்டுகள்மாண்ட புருஷர்களும், குரிதெரியாமல் அழுதனராமவர் குறைகளைச்சொல்லித் துதித்தனராம். 12

ஒன்றிரண்டானல் தெரிந்திடலாமொரு பத்துயிருப தறிந்திடலாம், குன்றுபோலேயிரு நூற்றியெழுபது கூட்டப்பிணங்களை யாரறிவார். 13

ஒர்கரார்பட்ட துன்பமதைபிந்த ஊராரறிந்திட வேணுமென்று, தார்புகழ்முனி சாமிசொன்னதமிழ் தப்பிதமொப்புவீ ரன்பர்களே. 14

திருநெல்வேலிகொட்டாய்சிந்து முற்றிற்று.

---